உ

சிவமயம்

தந்திவிலாசம்— "Oolian" Regd. No. M. 1509. "Dhana Vysia Oolian"

# தனவைசிய ஊழியன்

தனவைசிய ஊழியர் சங்கத்தினின்றும்

வெள்ளி தோறும் வெளிவருவது.

குடிசெய்வ லென்னு மொருவற்குத் தெய்வம்
மடிதற்றுத் தான்முந் துறும்—திருக்குறள்.

ஊழையும் உப்பக்கங் காண்பர் உலைவின்றித்
தாழா துஞற்று பவர்—திருக்குறள்.

மலர் ந. காரைக்குடி துந்துபிஹு புரட்டாசிமீ கநஉ (உகூ—கூ—ககூஉஉ) இதழ் ந

## ஓதுவ தொழியேல்.

"ஓதுவ தொழியேல்" என்பதற்கு வாசிப்பதை நீக்காதே என்பது பொருள். வாசிப்பதைச் சிறிதுசிறுத்தினும் அதனாலேற்படும் பயன் யாவரும் அநுபவத்தற் கண்டதே. மனிதன் ஈடேறுவதற்குப் பெருந் துணை புரிவது கல்வி. "ஓதாதார்க் கில்லை யுணர்வொடொழுக்கம்" என்றபடி கல்லாதார்க்கு உணர்வு மிருக்கமாட்டாது; ஒழுக்கமு மிருக்கமாட்டாது. சுருங்கச்சொல்லுமிடத்து மனிதயாக்கை பெற்ளேர் எந்தப்பிரயோஜனத்தை யடைய வேண்டுமோ, அந்தப்பிரயோஜனத்தை யடைதற்கு, அதாவது, மனிதப் பிறவியின் பேறடைதற்குக் கல்வி யின்றியமையாததென்பது யாவரும் கண்டவுண்மை. கசடறக் கற்றலும் அதன்படி நிற்றலுமே பேறடையும் சாதனம். முதலில் கசடறக் கற்றல் வேண்டும். பிறகு அதன்படி நிற்றல் வேண்டும். கற்றபடி நிற்றற்கு ஓதுவ தொழிதல் ஆகாது. முன்னேபடித்தது தானே எனவெண்ணி அலட்சியமாய் விடுதல் ஆகாது. படித்தவற்றைத் திரும்பத் திரும்ப ஓதிக்கொண்டே யிருத்தல் வேண்டும். ஓதுவது சிறிதொழியின் படித்தவை மறந்துவிடும். கற்ற கல்வியை மறந்துவிடின் அதனைத் தொடங்குங்கால் எவ்வளவோ துன்பம் பயக்கக் கற்றது விழலுக்கிறைத்த நீராகிவிடும். கற்று மறப்பதும் அதனைக்கல்லாது விடுவதும் ஒன்றே. கற்றுமறக்கும் கல்வியைக் கற்று மறந்த நாளன்றி, அக்கல்வியைக் கற்ற நாளும் வீணாகி விடுகிறது. கல்வி கற்ற நாளெல்லாம் பிறப்பறுக்கக்காரணமாகிய நன்னாளாகக் கொள்ளவேண்டியதிருக்க, அதனை அங்ஙனம் கொள்ளாது செய்தலோடு மமையாது, அந் நல்லநாளையும் தீயவீணாளாகக் கொள்தற்கு இவ் வோதுவதொழிதல் காரணமாக விருக்குமானால், ஓதுவ தொழிவதால் வரும் தீங்கை நாம் சொல்லவும் வேண்டுமோ? ஒரு பொருளைப் பெறுவதிற் செலுத்தும் கவனத்தைக் காட்டினும் அப் பொருளைப் பாதுகாத்து வைத்துக் கொள்வதில் பதின்மடங்கு அதிகமான கவனத்தைச் செலுத்துதல் வேண்டும். சர்வ சாதாரணமாக இமைப்போழ்தில் பெற்றுக் கொள்ளக்கூடிய ஒரு பொருளாக விருந்த போழ்தினும், என்ன சாதாரணமாக அகப்படக்கூடிய பொருள்தானே யென்று எண்ணிப்பாதுகாப்பில் தவறி, அப்பொருளை விட்டு விடுதலே தவறு. அது எளிதிற் கிடைக்கும் பொருளே யெனினும் கிடைத்தது விடுத்துத் திரும்பவும் பெறுதல் அநாவசியமும் அறியாமையு மல்லவா? அங்ஙனமாக, பெறலரும் கல்வியை அஜாக்ரதையினால் தவற விடுதல் எவ்வளவு பேதைமை. கல்வி கற்றல் போன்ற சிரமம் பிறி தொன்றில்லை யென்பது கற்றோர் யாவரு மறிந்ததே. அதனால் பெறும் இன்பம் போன்ற இன்பமும் பிறி தொன்றில்லை யென்பதும் அங்ஙனமே. "தொடங்குங்காற் றுன்பமாய் இன்பம் பயக்கும்" என்றாரன்றோ நீதி நெறிவிளக்கியவரும். எதிற்றுன்பமிருக்கிறதோ அதில்தான் இன்பமு மிருக்கிறது என்பது யாவரும் ஒப்ப முடிந்ததே. பெறற்கரிய பொருள் ஒருவற்குக் கிடைக்குமாகின் அதனை எங்ஙனம் காப்பாற்றுதல் வேண்டும்? கல்வி போன்ற பெறலரும் பொருள் மனிதயாக்கை பெற்றோர்க்குப்பிறி தொன்றில்லை. கல்வியின் மேம்பாட்டைக் கற்றுணர்ந்தோரும் அளவிட்டுரைக்க முடியாதென்றால் நாம் உரைத்தல் எங்ஙனம்? நெஞ்சத்து நல்லம் யாமென்னும் நடுவு நிலைமையை யுணர்த்தத் தக்க கல்வியை— அறம், பொருள், இன்பமும் வீடும் பயக்கும் கல்வியை— எம்மையுலகத்துங் காண வொண்ணு மம்மாறுக்கும் மருந்தனைய கல்வியை— எச்சமெனவொருவன் மக்கட்குச் செய்வன பிறிதில்லாவொரு பொருளாகிய கல்வியை— ஆழிசூழுலகைத் தனியாழி செலுத்தி அறமோங்கக் கோலோச்சும் மன்னனைக் காட்டினும் சிறப்புடையவனாக ஒருவனைக் கொள்தற்கு ஏதுவாக வுள்ள கல்வியை— வெள்ளத்தா லழியாத, வெந்தழலால் வேகாத, வேந்தராலும் கொள்ளத்தான் கூடாத, கொடுத்தாலும் நிறைவொழியக் குறைவுறாத, கள்ளற்கோ மிகவரிதாய்க் காவற்கோமிகவெளிதாய் உள்ள கல்வியை— நாற்பாற் குலத்தினும் மேற் பாலாக்கும் கல்வியை, கற்கும் சிரமங்களைக் கடந்து கற்றபின், அதனை ஓதுவ தொழிந்து கைவிடுதல் ஆகுமோ? கல்வியோ கரையற்றது. கற்பவர் நாளோ மிகச்சில. மிகச்சில நாட்கட்குள் கரையற்ற கல்வி கற்க வேண்டியதாகிறது. ஆராய்ந்து வேண்டும் கல்வி கற்றற்கே ஆயுள் போதவில்லை. அங்ஙனமாக, கற்றவற்றையும் ஓதுவ தொழிந்து மறத்தல் எவ்வளவு கூடாத காரியம். ஓதுவதொழிவதால் கற்றவை மறவாதிருக்குமென்று கூறமுடியாது. கற்றவற்றில் கவனத்தைச் செலுத்திக் கொண்டே வந்தால் நாளடைவில் கற்றது மறவாதிருத்தலுமன்றி, மேலும்மேலும் அதிகரித்துக் கொண்டேவரும். இடையில் சிறிது ஒழிந்து விடின் பிறகு மிகுந்த சிரமத்தோடு அவற்றைக் கற்க நேரும். உலகத்தில் எந்தத் தொழிலும் அங்ஙனமே யாகும். ஒரு தொழிலில் மிகவும் தேர்ச்சிபெற்ற நிபுணனான ஒருவன், அத்தொழிலை இடையில் சில காலம் விடுத்து விடுவானானால் பிறகு கஷ்டத்தோடு சில காலத்திற்றான் அதனைக் கற்றுக்கொள்ளுகிறான். நீண்டகாலம் அத்தொழில் பழக்கமில்லாதுபோய் விடுமானால், அடியோடு மறந்துவிடுவதைக்கூடப் பார்க்கிறோம். ஆகவே எதுவும் அனுட்டானத்திலிருந்து வந்தாற்றான் தெரிந்த அளவுக்கு நன்மை பயப்பதோடு விர்த்திக்கும் ஏதுவாகும். ஆதலின், "ஓதுவ தொழியேல்" என்ற தமிழ் மூதாட்டியின் வாக்கை அனைவரும் பின்பற்றியொழுகி நன்மையடைவாராக!

## புதுமண வாழ்த்து.

கோயம்புத்தூர் பூளைமேடு
பண்டிதர்
ஸ்ரீமாந்
அ. கிருஷ்ணசாமி நாயுடு
அவர்கள் இயற்றியது.
நேரிசையாசிரியம்.

கேட்டனம் கேட்டனம்
புதுமணம் கேட்டனம்
கேட்குத் தோறும்
வேட்டுமெந் நெஞ்சம்
முன்பே ருலகில்
மக்கட் கெல்லாம்
மணமும் இன்றேல்
மணமும் இன்றே
மணமெனப் படுவது
மாந்தர்க் கெல்லாம்
குணமென வியல்பாய்க்
குறித்தநல் வமிழ்தம்
கட்டுக் கடங்காக்
காதல் மனத்தை
மட்டுப் படுத்தி
மகிழச் செய்து
திட்ட மாகவோர்
செயலி விருத்திப்
பரம னடியினைப்
பற்றச் செய்யும்
உரமது மிகுந்த
ஊக்கத் துணையிதை,
வாழ்க்கைத் துணையென
வாழ்த்துவர் நல்லோர்
இன்னநற் றுணையை
இயற்கையாய்ப் பொருந்த
இன்ன விழைப்பதை
என்னே என்பேம்!
தனவை சியம்செய்
தனவை சியத்தோர்
இனத்திற் பிறந்த
இளம்பெண் மக்களைத்
தாங்கற் கொண்ணுத்
தகாவிலை கூறலின்
ஆங்கது முறைமை
அன்றென் றுய்ந்து
கண்ட மாணிக்கக்
கற்றிளம் செல்வன்
எண்டிசை போற்றும்
இராம சாமி
முன்புதங் குலமே
முளைத்தற் கேதுவாய்ப்
பின்பு வேறாகப்
பிரிந்ததங் குலத்தில்
தெள்ளுநற் குணமும்
செயலும் ஒன்றாய்
உள்ளங் கொண்ட
வள்ளி யம்மையை
வாழ்க்கைத் துணையென
மணந்து கொண்டனன்
மணமும் மலரும்
மலரும் நிறமும்
நிறமும் வடிவமும்
நேர என்றும்
மணமக்க ளிருவரும்
மகிழ்ந்து
வாழ்க வாழ்க
பல்லாண்டு வாழ்கவே.

## அமீரின் பிரசங்கம்.

அமீர் உன்னத மேடையிலிருந்து கொண்டு பர்ஷியன் பாஷையில் பிரசங்கம் செய்தார். சர்தார்கள், மந்திரிகள், பிரதேசப்பிரதிநிதிகள், பொது ஜனங்கள் இவர்கள் சுமார் ௬000 பேர்கள் வரை பிரசங்ககாலத்தில் நின்றுகொண்டிருந்தனர். தாம் சக்கரவர்த்தியாக வந்த காலமுதல் தேசத்தில் பல துறைகளிலும் ஏற்பட்டிருக்கும் அபிவிருத்தியை அவர்குறிப்பிட்டார் வருமான வகைகள், ஏற்றுமதி இறக்குமதி வரிகள், சட்ட பரிபாலனம்,நியாயஸ்தலங்கள், ராணுவம், கல்வி முதலிய எல்லாத் துறைகளிலும் ஏற்பட்டிருக்கும் அபிவிருத்திகளை எடுத்துச்சொன்னார். மேலும் அவர் பேசியதாவது:—நீங்களே எஜமானர்கள்; என்னை ச்சக்கரவர்த்தியென்று நீங்கள் அழைத்தபோதிலும் நான் உங்களுடைய ஊழியனே. நான் செய்து வருவதெல்லாம் உங்களுடைய நன்மைக்காகவே. முற்காலத்தில் அதிகாரிகளும், தனவந்தர்களும், ஏழைகளுக்குப் பல கொடுமைகளிழைத்துவந்தனர். இப்பொழுது சட்டத்தின்முன்பாகஎல்லோரும்சமத்துவமானவர்களே. நானுள்பட எவருக்கும் பிறரை அடித்து இம்சைப் படுத்த சுதந்தரமில்லை. எல்லோரும் இப்பொழுது சுயேச்சை யுடையவர்களே. ஏற்கனவே அதிகாரிகள் லஞ்சம்வாங்கிவந்தனர். அதனால் ஜனங்கள் பலவித கஷ்டங்களுக்காளாகி வந்தார்கள். இப்பொழுது லஞ்சம் வாங்கும் அதிகாரிகள் எந்த அந்தஸ்துடையவராயினும் தண்டனை யடையாமல் தப்பமுடியாது. இதுதான் உங்களுக்குக் கிடைத்திருக்கும் மகாசாஸனமாகும். அரசரைப்பலவந்தப்படுத்தி அதை நீங்கள் பெறவில்லை. அவராகவே மனமுவந்து உங்களுக்களித்திருக்கிறார். நிர்வாகச்செலவு வர வர அதிகரித்தும் பொக்கிஷத்தில் பணம் பெருகிவருகிறது. பல தொழில்களைக் கற்றுவருவதற்காக ஜெர்மனி, இந்தியா, பிரான்ஸ் முதலிய தேசங்களுக்கு கவர்ன்மெண்டு செலவில் ௪00 மாணவர்களை அனுப்பியிருக்கிறோம். கல்வி இலவசமாகக் கற்றுக்கொடுக்கப் படுவதுடன் பல ஏழையானவர்ளுக்குப் புத்தகங்களும் சாப்பாடும், உடுப்புகளும் இனாமாகக்கொடுக்கப்பட்டு வருகின்றன. நமது நாட்டில் உற்பத்தி செய்யப்படும் சாமான்கள் பிறதேச சாமான்களை விட மட்டமாக இருந்தபோதிலும், அவைகளையே நீங்கள் உபயோகப்படுத்த வேண்டும். நீங்கள் அன்னிய நாட்டுச்சாமான்களை உபயோகித்தால் உங்களுடைய பணம் சத்துருக்களிடம் போய்ச் சேர்ந்து வெடிக்குண்டுகளாக உங்கள் தலைமீதுவந்து விழும். நீங்கள் எல்லோரும் சுதரையே உடுத்த வேண்டும். சுதரை உபயோகப்படுத்திரவ வேண்டுமென்று அடிக்கடி நான் வற்புறுத்தி வருவதைக் கொண்டு பலர் என்னைப் பைத்தியக்காரனெனக் கூறிய போதிலும் எனக்கு அக்கரையில்லை. இப்பொழுது நேர்த்தியான கதர் இத்தேசத்திலேயே உற்பத்தி செய்யப்படுகிறது. நான் அணிந்திருக்கும் உடுப்புகள் இந்த தேசத்திலேயே தயாரானவை. சேனாதிபதியும் உள் நாட்டில் தயாரித்த உடையையே அணிந்திருக்கிறார். இந்த உடையை நான் அணிந்திருப்பதால் எவ்விதத்திலும் நான் பிறருக்குத் தாழ்ந்தவனாகிவிடவில்லை. அதனால் என்னுடைய கௌரவமும் குறைந்துவிடவில்லை. இதன் மூலமாக உங்களுடைய செலவும் குறைவதுடன்,பலருக்கு வேலைதேடிக்கொடுக்கிற பெருமையும் உங்களுக்குண்டாகும். திருட்டுத்தொழிலிலும் ஏனைய விஷமச் செயல்களிலும் அவர்களுடைய புத்தி பிரவர்த்திக்காமல் நீங்கள் தடுக்கக்கூடும்.நான்ஏற்கனவே ஆடைகளுக்காகவருஷத் க-க்கு,௧௨000 ரூ. செலவழித்து வந்தேன். இப்பொழுது எனக்கு வருஷம் க-க்கு, ௬00- ரூபாய் தான் செலவாகிறது. எல்லோரும் சத்திய சந்தர்களாகவும், தத்தம் கடமைகள் தவறாமலும், மதப்பற்றுள்ளவர்களாகவு மிருந்துவர வேண்டும். மதப்பற்றில்லாவிடில் இகபரங்களில் சுகமில்லை. நான்எப்பொழுதும் இறக்கசித்தமாக இருக்கிறேன். ஆனால் நான் ஆப்கானிஸ்தானத்திற்குச்செய்யஉத்தேசித்திருக்கும்நன்மைகளில் நூறிலொரு பங்குகூட இன்னமும் செய்யவில்லை. இஸ்லாத்திற்கும், ஆப்கானிஸ்தானத்திற்கும் உழைக்க வேண்டுமென்பது என்னுடைய கோரிக்கை, நான் உங்களுடைய ஊழியனானகால முதல் எனக்குஓய்வேயில்லை. தேசத்தின் நிலைமையை அபிவிருத்தி செய்ய அனவரதமும் உழைத்து வருகிறேன். இஸ்லாத்திற்கும்ஆப்கானத்திற்கும் சேவைசெய்ய எனக்கு ஆண்டவன் சக்தியளிப்பாராக. அல்லது நான் இறக்கக் கடவேன் என்று சொன்னார்.

சு—மி.



## காந்தியடிகள் கடிதங்கள்.

### பணியின் பெருமை.

காந்தியடிகள் தென்னாப்பிரிக்காவில் வாசஞ்செய்துக் கொண்டிருந்த காலை இந்தியாவிலிருந்த அவருடைய குமாரர் ஸ்ரீமான் மணிலாலுக்கு குஜராத்தி பாஷையில எழுதிய கடிதங்கள் சில இப்பொழுது வெளி வந்திருக்கின்றன. அவைகளில்சிலவற்றின் சாரத்தை ஈண்டு வெளியிடுகிறோம்.

உண்மைப் பணி

ஜோஹான்னஸ்பர்க்
எ—எ—ககூ0க

அன்புள்ள மணிலாலுக்கு

ஒரு காரியத்தைப்பற்றிய வளவில் மேலே என்னசெய்வதென்று திகைத்து நிற்குங்காலத்தில் அநேக ஜாக்ரதையுடன் நீ இருப்பதாக எனக்குத் தெரிவித்திருக்கிறாய். உன்னுடைய நிலைமையில் நான் இருந்தால் என் காரியத்தைச் செய்து முடிப்பதிலே கண்ணாயிருப்பேன். பெற்றோரைப் பேணுவதும் அறிவை விருத்தி செய்துக் கொள்வதும் பயிர்த்தொழில் நடாத்துவதுமே உன் தற்கால வேலைகளாக இருக்கவேண்டும். எதிர்கால வாழ்வைப்பற்றி நீ நினைக்கவேண்டியது அநாவசியம். அப்பொறுப்பு உன் பெற்றோர்களைச்சார்ந்தது. அவர்கள் இறந்த பிறகே அப்பொறுப்புகள் யாவும் உன் தலையில் வந்து சேரும்; ஆனால் ஒன்று நிச்சயம். நீ நியாயவாதித் தொழிலையாதல் வைத்தியத் தொழிலையாதல் மேற்கொள்ளக்கூடாது. நாம் ஏழைகள்; அந்த ஏழ்மை நிலையிலேயே எப்பொழுதும் இருக்க விரும்புகிறோம். நம்மைக் காப்பாற்றிக்கொள்ளப் போதிய பணமே நமக்கு வேண்டும். எப்பொழுதும் உன் ஞாபகமே எனக்கு அதிகமாயிருக்கிறது. மனித சமூகத்தார் முக்கியமாக அநுசரிக்கவேண்டிய வேலை ஒன்று தான் அது குணத்தை அல்லது ஒழுக்கத்தைப் பண்படுத்திக் கொள்ளுதலேயாகும். பணம் சம்பாதிக்க வேண்டுமென்பதற்காக குறித்த எந்தக்கல்வியையும் நீ கற்க வேண்டுவதில்லை. மானிட தருமத்தினின்றும் பிறழாது நடப்பவன் பட்டினியாகக் கிடக்கமாட்டான். அங்ஙனம் பட்டினியாயிருக்கும்படிநேரிட்டாலும் அதை அவன் பொருட்படுத்தவுமாட்டான். கவலை கொள்ளாதே: உன்னால் முடிந்ததைக் கற்றுக்கொள். இந்தக் கடிதத்தை எழுதிக் கொண்டிருக்கும் போது உன்னைக்காண வேண்டுமென்ற அவாவும் உன்னை என்மார்புறத் தழுவிக் கொள்ள வேண்டுமென்ற ஆசையும் என் உள்ளத்தில் எழுகின்றன தற்சமயத்தில் இவைகளைச்செய்ய அநுகூலமில்லாதலால் என் கண்களில் நீர் ததும்புகிறது. உன் விஷயத்தில் பாபு (காந்தியை அவருடைய குமாரர்களும் மற்றஉறவினர்களும் பாபு என்று அழைப்பது வழக்கம்) கொடுமையாக நடந்து கொள்ளமாட்டார் என்பதை ஞாபகத்தில் வைத்துக்கொள். நீ நல்ல ஸ்திதிக்குவர வேண்டுமென்பதிலேயே நான் கண்ணுங்கருத்துமாயிருக்கிறேன். பிறர்க்குத்தொண்டு பூண்டொழுகும் நீ எப்பொழுதும் பிறரால் நிராகரிக்கப்படமாட்டாய் என்பது நிச்சயம்.

### தன்னைத்தான் அறிதலேபெருமை

ஜோஹான்னஸ்பர்க்
க—கூ—ககூ0க

அன்புள்ள மணிலாலுக்கு

படிப்பு என்பது என்ன? பிறர்க்குத் தொண்டு செய்வதும் பிறர்க்கு நன்மையைச் செய்வதும் இங்ஙனம் செய்வதில் தன்னைப்பற்றி அதிகமாகப்பாராட்டிக் கொள்ளாமையுமே உண்மையான கல்வி யாகும். உனக்கு வயது ஆக ஆக இவ்வுண்மை நன்கு புலனாகும். நோயாளிகளுக்குச் சிகித்ஸை செய்வதை விட வேறு உயர்ந்தது என்ன இருக்கிறது. இதுவே மதம்-இதுவே அம்மதத்தின் சாரம். ஆன்மாவை விட தேகத்தைப் பிரதானமாகக் கொள்ளக்கூடாது. ஆன்ம தத்துவத்தை அறிந்தவர்கள், தேகத்திற்கு ஆன்மா புறம்பானது என்பதை நன்குணருவார்கள். அவர்கள், அஹிம்சா தருமத்தைக் கைவிட்டுத் தேகத்தைக் காப்பாற்றமுயலமாட்டார்கள். இது பலர்க்குக் கஷ்டமாகவே தோன்றும். ஆனால் ஆன்ம உண்மையை அறிந்தவர்கள் மேற் கூறிய வண்ணமே நடந்து கொள்வார்கள். தேகத்தின் மூலமாகவே ஆன்மாவானது, நன்மையான காரியங்களையோ தீமையான காரியங்களையோ செய்ய முடிகிறதென்று சிலர் தவறாக நினைக்கிறார்கள். தன்னல மறுப்புக்காகவே ஆண்டவன் இந்தத் தேகத்தை நமக்கு அளித்திருக்கிறான்.

### சிறந்த கல்வி

ஜோஹான்னஸ்பர்க்
க௨—௫0—ககூ0க

பிரியமுள்ள மணிலாலுக்கு

ஸ்ரீமான் வெஸ்ட் முதலாயினோர்க்கு நீ சிசுருஷை செய்து கொண்டிருப்பதாக அறிகிறேன். இதுவே சிறந்தகல்வி. தன் கடமையைத் தவறாது செய்கிறவன் உயர்ந்த படிப்பைப் படித்தவனாகிறான். படிப்பையெல்லாம் கட்டி வைத்து விட்டதாக நீ கூறுகிறாய். அது சரியல்ல. நீ எவ்வளவுக் கெவ்வளவு தொண்டு செய்கிறாயோ அவ்வளவுக்கவ்வளவு கற்றுக் கொள்கிறாய். இலக்கியப்படிப்பினின்றும் விடுதலை பெற்றுக் கொண்டாய் என்பதை நான் அங்கீகரிக்கிறேன். அதனால் எவ்வித பாதகமும் இல்லை. இது விஷயத்தில் நீ இப்பொழுது அடைந்துள்ள நஷ்டத்தைப் பிற்காலத்தில் ஈடுபடுத்திக் கொள்ளலாம். ஆனால் தொண்டு செய்ய மற்றொரு சமயம் வாய்க்காது. பிறருக்குத் தொண்டு பூண்டொழுகுவதில் நீ பரிசுத்த மனமுடையவனாயிருக்கும் வரை நீ நோய்வாய்ப்படமாட்டாய் என்பதை நன்றாக ஞாபகப் படுத்திக் கொள். அப்படி நீ நோயாய் விழுந்தாலும் அதனால் நான் வருத்தப்பட மாட்டேன். இம்மாதிரியே நானும் நீயும் பூர்ணத்துவத்தை அடைவோமாக. உண்மையைக் கடைப்பிடித்து வாழக்கற்றுக் கொள். அதுவே உண்மையான படிப்பு. மற்றவை யெல்லாம் படிப்பல்ல. ஆசீர்வாதம்.

### "தகப்பனார் வகுப்பிலேயே"

ஜோஹான்னஸ்பர்க்
௨௨—௪0—ககூ0க

அன்புள்ள மணிலாலுக்கு

"நீ எந்த வகுப்பில் படிக்கிறாய்" என்று யாராவது உன்னைக் கேட்டால் நீ ஏன் வெட்கப் படுகிறாய்? இனிமேல் "பாபுவின்-என் தகப்பனாரின்-வகுப்பில் படிக்கிறேன்" என்று கூறுவாயாக. இலக்கியப் படிப்பைப்பற்றி நீ ஏன் அதிகக் கவலைப் படவேண்டும்? ஜீவனத்திற்காகச் சம்பாதிக்கப் படிக்கவேண்டுமென்று நீ நினைப்பாயானால் அது தவறு. ஏனெனில், ஆண்டவன் ஒவ்வொருவனுக்கும் பிழைப்புக்குவழி காட்டுகின்றான். கையால் வேலைசெய்து நீ பிழைக்கலாம். தேச சேவை செய்வதற்கு நீ பழக்கப்படுத்திக் கொள்ள வேண்டுமென்று விரும்பினால் அப்பழக்கத்தை ஏற்கெனவே நீ பெற்றுவருகிறாய். தன்னைத்தானே அறிந்துக் கொள்ள வேண்டுமென்ற விருப்பம் உனக்கிருக்குமானால் நீ நல்லவனாயிருக்க உழைக்க வேண்டும். ஏற்கெனவே நீ நல்லவன் என்று எல்லாரும் கூறுகின்றனர். உன்னைப் பற்றிக் கவனிக்க நான் இங்கிருக்கிறேன் என்று நீ நம்புவாயானால் உன்னைப்பற்றி நீ அதிகமாகக் கவலைப்படாதே. ஆசீர்வாதம்.

### பணியே பெரிது

ஜோஹன்னஸ்பர்க்
௧0—அ—ககூ0க

அன்புள்ள மணிலாலுக்கு

இப்பொழுதே சிறிது ஓய்வு ஏற்பட்டிருக்கிறது. செவ்வாய்க் கிழமை

(ரு-ம் பக்கம் பார்க்க)

நாளென்செயும்! வினைதானென்
செயும்! எனை நாடி வந்த
கோளென்செயும்! கொடுங்கூற்
றென்செயும்! குமரேச ரிரு
தாளுஞ் சிலம்புஞ் சதங்கையுந்
தண்டையும் ஷண்முகமும்
தோளுங் கடம்பும் எனக்கு முன்னே
வந்து தோன்றிடினே.

—கந்தாலங்காரம்

தனவைசிய ஊழியன்,
காரைக்குடி புரட்டாசிமீ கஉ

## செய்கைக் குரிய யாக்கை.

உலகில் ஆன்மாக்கள் பல வேறு வகையான யாக்கையோடு கூடிப்பிறக்கின்றன. ஆன்மாவில் வேற்றுமையில்லை யெனினும் புகும் யாக்கைகட்குத் தனித்தனியே செயல் ஏற்பட்டுளது. முற்பிறப்பில் மிருக யாக்கைபெற்ற ஒரு ஆன்மா இப்பிறப்பில் மனிதயாக்கை பெற்றிருக்கலாம். வரும் பிறப்பில் அதுவேறொன்றின் யாக்கையைப்பெறலாம். ஒரே ஆன்மா ஒரு சமயம் மிருகயாக்கையையும் பிறிதொரு சமயம் மனித யாக்கையையும் பிறிதொரு சமயம் பிறிதொரு யாக்கையையும் பெறுகின்றதெனினும் யாக்கை நோக்கியே செயல் நிகழும். போன பிறப்பில் ஒரு ஆன்மா மாட்டின் யாக்கையைப் பெற்றிருக்குமானால் அது வயலுழுதிருக்கும்; வண்டியிழுத்திருக்கும்; வைக்கோல் தின்றிருக்கும்; வாய் பேசியிருக்கமாட்டாது. அதே ஆன்மா மனிதயாக்கை பெற்றுவிடுமானால், இச்செயல் புரிவதில்லை. ஆன்மா ஒன்றே யெனினும் யாக்கை கருதிச் செயல்மாறுபடுகின்றது. எத்தனையோ ஆன்மா மனிதராக விருந்து, மாடாகவந்திருக்கும்; ஆடாக வந்திருக்கும்; புலி கரடிகளாக வந்திருக்கும்; கொக்குக் குருவிகளாக வந்திருக்கும்; இன்னும் எத்தனையோ யாக்கைகளைப் பெற்று வந்திருக்கும்; மரம் செடி கொடி யாகவும் வந்திருக்கும். இப்படியே இவைகளின் யாக்கையைப் பெற்றிருந்த ஆன்மா மனிதனுகைவும் வந்திருக்கும். ஆன்மாக்கட்குச் செயல் வகுக்கப்பட்டிருப்பின் மாடுகளிற் சில பேசல் வேண்டும்; ஆடுகளிற் சில அறிதல் வேண்டும்; புலி கரடி முதலியவற்றிற் சில பகுத்தறிவைப் பெற்றிருத்தல் வேண்டும். மனிதரிற் சிலர் மாடுபோற்கத்துதல் வேண்டும்; சிலர் கோழிபோற் கூவுதல் வேண்டும்; சிலர் பிறிதொன்று போற் பிறிதொன்றியற்றல் வேண்டும். இங்ஙனம் ஒன்றும் நாம் காண்கின்றோமில்லை. இவ்வெளித்தோற்றமான விஷயங்களை ஆன்மாக்கள் யாக்கைக் கேற்பவேசெய்து வருகின்றன. ஆனால் உள் விஷயம் யாக்கைக்குரிய செயலைக் கடந்து மாறுபடப் பல நிகழ்வதை நாம் பார்க்கின்றோம். மனிதர்க்குக் கீழான யாக்கைபெற்ற ஆன்மாக்களை நாம் ஈண்டு விட்டுவிடுவோம். அவைகட்குப் பகுத்தறிவு யில்லையாதலின் தங்கள் தங்கட்குரிய செயல்களை அயன்விதித்தபடி செய்துக்கொண்டு தான் செல்கின்றன.

மனிதயாக்கை பெற்றோர் அதற்குரிய செயல் புரிகின்றனரா வென்பதே ஈண்டு ஆராயவேண்டியதாகிறது. யாவரும் அங்ஙனம் புரிந்துவிடின் உலகில் அதர்மம் என்ற ஒன்றேயிருக்கமாட்டாது. உலகில் நிகழும் செயலெல்லாம் நல்லனவாகவே நிகழும். அன்றியும் மனிதயாக்கையைப்பெற்றுவிட்ட ஒரு ஆன்மா, திரும்ப வேறொரு குறைந்த யாக்கை பெற்றதென்ற கதையே உலகில் இல்லாது போய்விடும். அப்படி உலகில் எந்நாளும் இருந்ததாகத் தெரியவில்லையாதலின் முற்பிறப்பிற் செய்த பாபபுண்ணியங்கட்கேற்ப நடந்துகொண்டே செல்லுமெனினும், அதனை யெண்ணிக்கொண்டு மாறுபட வொழுகிக்கொண்டு செல்லுதல் அறிவற்ற செயலாகும். உலகில் தீமைகள் பல எந்நாளும் இருப்பது இயல்பே யெனினும், "உலகத்திற்குத் தீமையும் சகஜந்தானே! எல்லோரும் முறையாகவொழுகிவிடின் தீமையென்பதொன்றிருக்கமாட்டாதல்லவா? அங்ஙனம் எல்லோரும் முறையாக ஒழுகி நற்பேறடைய முடிந்திருக்குமானால் தீமைதருவன வற்றை ஏன் முன்னே சிலர் செய்து இடர்ப்பட்டிருக்கின்றனர். தீமையொழிவதுஒருகாலுமில்லை யாதலின் அவ்வகுப்பில் நாம் சேர்ந்து கொள்வோம்" என எண்ணி மனிதயாக்கை பெற்றோரில் யாரேனும் மனித யாக்கைக் குரிய செயலுக்கு மாறுபட வொழுகலாமோ? "மனித யாக்கை பெற்றோர் அதற்குரிய செயலுக்கு மாறுபட வொழுகுவது எக்காலத்தும் இயற்கையாதலின் ஒரு கூட்டத்தார் அப்படியே செய்யலாம்" என்று எந்தப் பெரியோராவது கூறியிருக்கின்றனரோ? எந்த அறநூல்களாவது விதித்திருக்கின்றனவோ? அது எங்ஙனமாயினும் ஆக! தங்கள் தங்கள் சம்பந்தப்பட்டமட்டில் மனிதயாக்கை பெற்ற ஒவ்வொருவரும் அதற்குரிய செயல் புரிந்தொழுக வேண்டுவதே முறை. மனிதயாக்கைக் கென விதித்த செயலினின்றும் தவறி இழிவான ஜந்துக்கள் செய்யும் செயல் புரிந்தழிந்து அடுத்த பிறப்பு அவற்றில் ஒன்றைத் தாங்குதல் மனிதயாக்கை பெற்றுவிட்டோர்க்கு அழகல்ல. யாக்கைகட்குள்சிறந்தது மனிதயாக்கை யென்பதை நமது நீதிநூல்கள் மூலம் யாவருமறியலாம். அத்தகைய பெறலரும் யாக்கையைப் பெற்றும், பெற்றபயனை யெய்தாது, திரும்ப வேறொரு இழிவான யாக்கை பெற்றுழல்வது போன்ற அறியாமை பிறிதொன்றில்லை. மனிதயாக்கை பெற்றிருந்தாலும் அதற்குரிய செயலின்றி மாறுபடவொழுகுபவர், யாக்கை பெற்ற ஒன்றற்காக மட்டினும் மனிதராகக் கொள்ளப்பெறுது, அறிஞர்களால் ஒதுக்கப்படுவது உலகறிந்ததே. அன்றியும் மனிதயாக்கை பெற்றும் அதற்குரிய செயல் புரியாதோரை, இவர் எச்செயல் புரிகின்றரோ அச்செயலுக்கேற்ற ஒரு வடிவத்தோடுகூட வரும் பிறப்புகளில் கடவுள் ஆக்குவார் என்பது திண்ணம்.

மனிதயாக்கை பெற்றும் ஒருவர்க்குக் கேடு சூழுவதே தொழிலாகக் கொண்ட ஒரு ஆன்மா, அடுத்தபிறப்பில், மனிதர்க்குக் கேடு சூழும் தொழிலுடைய ஒரு மிருகப் பிறப்பையேயடையும். மனிதயாக்கை பெற்றும் அதற்கு முற்றிலும் முரணாகத் தங்கு தடையின்றிக் கண்ட கண்ட விடங்களிலெல்லாம் முறையின்றிச் சிற்றின்பம் நுகரும் ஒரு ஆன்மா, அதற்குரிய மிருகப் பிறப்பையே யெய்தும். பெற்றபெண்ணை விற்றுண்ணும் ஒரு பேதை ஆன்மா, அடுத்தபிறப்பில் அதற்குரிய ஒன்றின் வடிவத்தைப்பெற்றுத் திரிங்கலையும். தேசம், மதம், பாஷை, ஜாதி முதலியவற்றின் சீர் கேடறிந்தும் சீர்ப்படுத்த முந்தாது, வீணே காலங்கழிக்கும் ஒரு ஆன்மா, அதற்குரிய ஒன்றனை யெய்தும். இங்ஙனமே யாவும்.

கிடைத்தற் கரிய மனிதயாக்கையைப் பெற்றும் யாக்கைக் குரிய செய்கை செய்யாவிடின் பிறகு செய்கைக் குரிய யாக்கை மிக வெளிதிற் கிடைத்துவிடும். ஆதலால், மனிதயாக்கை பெற்றோர் இழிந்த பிறப்புக்களை யெய்துதற்குரிய செயல்புரிந்தழியாது மனித யாக்கைக் குரிய செயலே புரிந்துய்ய வேண்டுவ தகடன்.

## இடி முழக்கம்,

### இவ்வாரப்பத்திரிகை.

வெள்ளிக்கிழமையாகிய இன்று சரஸ்வதி பூஜையை முன்னிட்டு நமது இவ்வாரப்பத்திரிகை பத்துப் பங்கங்களோடு வெளிவருகிறது.

### சந்தோஷச் செய்திகள்.

நமது புதுமணங் குறித்துப் பற்பல விடங்களினின்றும் பற்பல சந்தோஷச் செய்திகள் வந்து குவிந்து கொண்டே யிருக்கின்றன. சந்தோஷச் செய்தி விடுக்கும் அன்பரனைவர்க்கும் எமது வணக்கம் உரியதாக!

### தமிழ்ப்பதினெட்டாம் நாள்.

நாம் சென்றவாரம் எழுதிய படியே இத்தமிழ்த் திங்கள் பதினெட்டாம் நாளாகிய புதன்கிழமை யன்று காந்தியடிகள் திருநாள் மிக, விமரிசையாக நந் தனவைசிய நாட்டில் முழங்க இறைவற்கு விண்ணப்பித்துக் கொள்ளுகிறோம்

### காந்தியடிகளின் கடிதங்கள்.

நமது காந்தியடிகள் தம் புதல்வர்க் கெழுதிய கடிதங்கள் மற்றொரு பக்கத்தில் வெளியிடப்பெற்றிருக்கின்றன. நமது மகாத்மா மகனுக்கு விடுத்த செய்தியை, மகனைப்பெற்ற தந்தையர் ஒவ்வொருவரும் உணர்ந்தாற்றுவராயின் நாடு இன்றே முன்னுக்கு வந்து விடுமன்றோ?

### அமீர் அரசர்.

ஆப்கானிஸ்தானம் அமீர் அரசர் சமீபத்தில் ஒரு பிரசங்கம் செய்திருக்கிறார். அதனை இவ்வார இரண்டாம் பக்கத்தில் வெளியிட்டிருக்கிறோம். அதனை ஒவ்வொருவரும் ஒருமுறைக்குப் பன்முறை ஊன்றிப் படிக்கவிரும்புகிறோம். ஒரு அரசர் இத்தகைய பிரசங்கம் ஒன்று செய்வது இக்காலத்திற்கு வியப்பினும் வியப்பேயாகும். அரசன் என்றால் ஊழியன் என்பது தான் பொருளென்பதை இவ்வரசர் விளக்கிவிட்டார். தந்நாட்டுத் துணியையே (கதர்) ஜனங்கள் அணிய இவ்வரசர் பெரிதும் விரும்புகிறார். இவர் கதரே உடுக்கிறார். நமது நாட்டுப் பண்டைக்கால அரசர்கள்வழி இவ்வரசர் ஒழுகுவதற்கு நன்றி செலுத்த நாம்பெரிதும் கடமைப்பட்டிருக்கிறோம். இன்னும் கொஞ்சநாளில் இவ்வரசர் தந்நாட்டுக் குடிகள் தந்நாட்டுத் துணியையே உடுத்தவேண்டுமென்று ஒரு சட்டம் போடுவாரென்று நம்பவும் இடமிருக்கிறது.

## உள்ளூர்ச் செய்தி

சாந்தியடிகள் திருநாள்:—ஏற்கனவே குறித்தபடி புரட்டாசிமீ கஅஉ யாகிய புதன்கிழமையன்று இவ்வூரில் காந்தியடிகள் திருநாள் நடத்துவதற்கு ஏற்பாடுகள்செய்யப்பெற்று வருகின்றன. திருவாளர்களான வ. வெ. சு. ஐயரவர்கட்கும் திருக்கோவலூர் ம. ரா. குமாரசாமிப் பிள்ளையவர்கட்கும் சொற்பெருக்கிடுவான் செய்தி விடுத்திருக்கிறது. தனவைசிய ஊழியன் பத்திரிகாலயக் கட்டிடத்தில் ஏழைகட்கு அன்னமளிக்க ஏற்பாடு செய்திருக்கிறது. கஅ௳ பகல் கஉ-மணிமுதல் அன்னமளிக்கப்பெறும். மாலை கூ-மணிக்கு கல்லுக்கட்டியில் சொற்பொழிவுகள் நிகழும். அதற்குமேல் அடிகளின் திருவுலா நிகழும் அன்பர்கள் யாவரும் புண்ணியக் கதருடையணிந்து அணியணியாகப் போந்து சிறப்பிக்க வேண்டுகிறோம். என தேசியக்கிளைச் சபைக் காரியதரிசி அறிவிக்கிறார்.

## தந்திச் செய்தி.

பினுங்கு புரட்டாசிமீ கஉஉ

மதராஸ் உண்டியல் விலை நூற்று எழுபத்தொன்பது
ஈயம் விலை என்பது
ரப்பர் விலை முப்பத்துமூன்று

ரெங்கூன் புரட்டாசிமீ கஉஉ

| | |
|---|---|
| உளுந்து | ௯௩௦ |
| கடலை | ௬௦௦ |
| துவரை | ௭௩௫ |
| நெல் | ௨௦௫ |
| பெரிய மில் அரிசி | ௪௪௦ |
| சிறிய மில் அரிசி | ௪௮௫ |
| உண்டியல் விலை | கஎ௮ |
| வெள்ளி | கூ௫ |
| தங்கம் | ௩௬—கஉ—0 |
| பவுன்விலை | கஎ—௫—0 |
| சவரணவட்டி | 0—௯—0 |

பணம் சவுதம்.

(௩-ம் பக்கத் தொடர்ச்சி)

யாகிய இன்று இக்கடிதத்தை உனக்கு எழுதுகிறேன். இங்கு கல்வி கற்றுக்கொள்ள அதிகமான வசதிகள் இருப்பதாக நினைக்க இடமிருக்கிறது. ஆனால் இங்கேயும் சில குறைகள் இல்லாமற் போகவில்லை. இருந்தாலும் நீங்கள் அனைவரும் சிறிது காலம் இங்கிருந்து போகலாமென்று நினைக்கிறேன். என்ன இடையூறுகள் வந்த போதிலும் நாம் நம் கடமைச் செவதினின்றும் பிறழக் கூடாது.

ஸ்ரீமான் கே- அவர்களுக்குக் குழந்தை பிறந்தது என்பது நல்ல செய்திதான். ஆனால் இவ்விஷயத்தைப்பற்றி என் அபிப்பிராயம் என்னவென்பது உனக்குத் தெரியும். இந்த அபிப்பிராயங் கொண்டிருப்பதற்காக நான் விசனிக்கிறேன். நம்முடைய நாட்டின் நிலையை நோக்குமளவில் ஒருசிலரே இப்பொழுது விவாகம் செய்துக்கொள்ளவேண்டும். விவாகம் என்பதில் ஆழ்ந்த பொருள்கள் அடங்கியிருக்கின்றன. காம நுகர்ச்சிக்காக விவாகம் செய்துக் கொள்வோர் மிருகங்களிலும் கேவலமானவர். புத்திரப் பேற்றை உத்தேசித்தே ஆடவரும் பெண்டிரும் ஒருங்கு சேர வேண்டுமென்று நமது சாஸ்திரங்கள் முறையிடுகின்றன. இந்த நிலையில் நின்று நாம் கவனித்தால் இப்பொழுது நமக்குப் பிறக்கும் பிள்ளைகள் காமத்தின் விளைவே என்று கூற வேண்டும். இதனாலேயே நமதுசமூகம் சீரழிந்து வருகிறது. "நவசக்தி"

# பொதுச் செய்தி.

**கல்லுப்பட்டி:**—நாளிதுமீ ௬௨ ஒரு சபை கூடியது. அதில் ஷை முதல் இவ்வூர் தனவைசிய வாலிபர் சங்கத்திற்கு ஸ்ரீமான் மெ. சுப்பிரமணியன்செட்டியாரவர்களை அக்ராசனராகவும் ஸ்ரீமான் மெ. சோமசுந்தரஞ் செட்டியாரவர்களை உப அக்ராசனராகவும் ஸ்ரீமான் சுப. அழகப்ப செட்டியாரவர்களை காரியதரிசியாகவும் ஸ்ரீமான் சித. உலகப்ப செட்டியாரவர்களை உபகாரியதரிசியாகவும் தெரிந்தெடுக்கப்பெற்றிருக்கிறது எனக்காரியதரிசி அறிவிக்கிறார்

***

**திருப்புல்லாணி:**—இவ்வூர் சிறந்த ஓர் சிவஸ்தலம். இவ்வூரில் ஒரு பெரிய பெருமாள் கோவிலொன்று இருக்கிறது. ஷை கோவிலுக்கு நகரத்தார்களும் மற்றவர்களும் ராத்திரிக் காலங்களில் சுவாமி தெரிசனம் செய்யப் போவது உண்டு. சுவாமி சன்னிதிதவிர மற்றஇடங்களெல்லாம் விளக்கே யில்லாதிருக்கிறது. விளக்கில்லாத விடங்களில் ஜனங்கள் கால் தடுமாறி யெத்தனையோ பேர் விழுந்தெழுந்திருக்கிறார்கள். சிலர் சுவாமி சந்நிதிதீபத்துக்கு எண்ணெய் திரி முதலானவைகளும் வாங்கிக் கொடுத் திருக்கிறார்கள், இனியாவது நம் நகரத்தார் கவனிப்பார்களாக! என கொழும்பிலிருந்து ஒரு நிருபர் எழுதுகிறார்

***

**கீழச்சிவற்பட்டி, அழகாபுரி, தனவைசிய சங்கம்:**—நாளிது ஆவணிமீ ௩௪ பிற்பகல் ௩ மணிக்கு நமது சங்கத்தின் முதல்வருட நிறைவுவிழாநடைபெற்றது. அவ்வமயம் திருவாளர் லெ. முத்தரசப்ப செட்டியாரவர்கள் தலைமை வகிக்க பிர்மஸ்ரீ- கணபதி சாஸ்திரியாரவர்கள் "பக்தி" என்பதையும் ராமச்சந்திர ராயரவர்கள் "இந்தியாவின் பெருமையும் தற்கால நிலைமையும்" என்பதையும் சேஷகிரி ராயரவர்கள் "கல்வி" என்னும் விஷயத்தைச் சிறிது நேரமும் உபந்யஸித்தார்கள், பின்னர் அக்கிராஸனாதிபதியவர்கள் முடிவுரை கூற சந்தன தாம்பூல சிற்றுண்டிகள் வழங்கப் பெற்று இரவு எழு மணிக்குச் சபை இனிது நிறைவெய்தியது, என்று காரியதரிசி மு. லெ. சோமசுந்தரம், எழுதுகிறார்.

***

**உலகம்பட்டி:**—ஸ்ரீஞானசம்பந்த வாசகசாலையில் நிகழும் புரட்டாசிமீ ௬௨ மாலை ௩ மணிக்கு சைவத்திருவாளராகிய ஸ்ரீலஸ்ரீ லெட்சுமண ஐயா அவர்கள் தலைமையில் சபை கூட்டப் பெற்று, கடவுழ் வாழ்த்துக்கூறிய பின் ஸ்ரீ பழ. சுப்பிரமணியன் செட்டியார் திருநாளைப்போவார் நாயனார் புராணம் என்பதையும் ம. வெள்ளையன் செட்டியார் கற்பு என்பதையும் பழ. சிவ, சிவராமன் செட்டியார் இல்லறம் என்பதையும் நன்றாய்ச் சொற்பெருக்கிட்டனர். தலைவரவர்கள் தக்கவாறு முடிவுரை நிகழ்த்தி, பின் அப்பர் சுவாமிகள் ப்ரபாவத்தில் ஓர் பகுதியை அன்புததும்பச் சபையோர் மனதில் நன்றாய்ப்பதியுமாறு உபந்யசித்தார்கள்.

இரவு எ மணிக்குச் சந்தன தாம்பூல விநியோகங்கள் வழங்கப்பெற்றுச் சபை இனிது நிறைவெய்தியது என்று உபகாரியதரிசி பழ. சுப்பிரமணியன் எழுதுகிறார்.

***

**கள்ளாங்குடி அஷ்டபந்தன மகா கும்பா பிஷேகம்:**—கர்ன மகாராஜாவால் பூசிக்கப் பெற்றதும் கர்னபுரி யென்று வழங்கப் பெறுவது மான, சிவகெங்கை ஜமீந்தாரவர்களைச் சேர்ந்த பூர்வீக க்ஷேத்திரமான ஸ்ரீயோகாம்பாள் பாகாம்பாள் சமேத ஸ்ரீ திருப்பாகத்தீஸ்வரருக்கும், பரிவாரங்களுக்கும், ஆவணிமீ உ௩௨ சுக்கிரவாரம் பகல் கசுஙு நாழிகைக்கு மேல் கஅஙு நாழிகைக்குள் தநுர் லெக்கனத்தில் சிவகெங்கை ஜமீன்தார் அனுமதியின்பேரில் கோட்டையூர் கயி. அரு. அருணாசல அம்பலம், அளகாபுரி சு பெரி. சுப்பிரமணியன் செட்டியார் ஒத்தாசையுடன் கோட்டையூர், க. வீ. சொ. அழகப்பசெட்டியார், ஷை கும்பாபிஷேகத்தை சாஸ்திர யுக்தப்படிக்கு விமரிசையாக நடத்தினார்கள். அன்று இராத்திரிப் பஞ்ச மூர்த்திகளும் எழுந்தருளித் திருவீதியில் திருவுலாப்போந்தன. என்று கோட்டையூர் வெ. நா. லெட்சுமணன் செட்டியார் எழுதுகிறார்.

***

**வேந்தன்பட்டி திருவள்ளுவர் வாசக சாலை:**— இவ்வாசக சாலையில் நாளிது புரட்டாசிமீ எ௨ முதல் ஒவ்வொருநாளும் இரவு அ-மணிமுதல் கஉ-மணிவரை நகரத்தார்களின் விருப்பத்திற்கிணங்க, ஸ்ரீ ராமாயணம் சிவனடியார்களால் வாசிக்கப் பெறுகிறது. இதில் டாம்பீகச் செலவுகள் கிஞ்சிற்றுமில்லை. பல அன்பர்கள் கேட்டு ஆனந்தமடைகிறார்கள். இறுதிவரை நன்கு நடைபெற ஈசனனுக்கிரகம் செய்வாராக.

விலையின்றி இனாமளிக்கப்பெறும்:— இவ்வாசக சாலையின் சார்பாக வெளியிடப்பெற்ற க. கொலைமறுத்தல், உ. தாய்ப் பாஷை, ௩. சதாசிவப் பிர்மத்தின் அற்புத விருத்தாந்தம் ஆகிய மூன்று புத்தகங்களும், காரியதரிசி, திருவள்ளுவர் வாசக சாலை வேந்தன்பட்டி மேலைச்சிவற்பட்டி போஸ்டு என்ற விலாசத்திற்கு அரையணாத் தபால் முத்திரை அனுப்பு வோருக்கு விலையின்றி இனாமாக அனுப்பப் பெறும்.

சம்பாவனை:— இவ்வாசக சாலைக்கு திருவாளர்களான, வெ. சி. பழ. பொய் சொல்லா மெய்யப்ப செட்டியாரவர்கள், தமது புதல்வி உமயபார்வதிக்கு நடந்த சாப்புக்கட்டுப் புதுமையில், ரூ-டு-ம் அழ. பி. இராமநாதன்செட்டியாரவர்கள், தமது புதல்வி அன்னபூரணத்திற்கு நடந்த காப்புக்கட்டுப் புதுமையில் ரூ டு-ம் பழ. கரு. ராம. இராமலிங்கச் செட்டியாரவர்கள். தமது புதல்வன் இராமலிங்கத்திற்கு நடந்த காப்புக்கட்டுப் புதுமையில் ரூ டு-ம் சம்பாவனை செய்தனுப்பியுள்ளார்கள். இவர்களுக்கு நன்றி செலுத்துகிறோம், என்று உபகாரியதரிசி, குப. அரு. ந. நடராஜன் எழுதுகிறார்.

***

**பள்ளத்தூர்:**—இவ்வூரில் புரட்டாசி மாதம் ௩ உயன்று தேசீய சபையின் ஆதரவில் கோயம்புத்தூர் ஸ்ரீமான் கிருஷ்ண சாமிநாயுடு அவர்கள் தற்கால நிலையைப்பற்றி சிவன்கோவிலில் நவாரத்திரிக்கென அமைக்கப்பெற்ற அலங்காரக் கொட்டகையில் சுமார் கடுO ஜனங்கள் மத்தியில் பிற்பகல் ௬ மணி முதல் எ௨ மணிவரை அதிவிமரிசையாகச் சொற்பெருக்கிட்டார்கள். பின் காரியதரிசி கோ வெங்கிட்டராமன் அவர்கள் வந்தனோபசாரம் சொல்ல இரவு அ மணிக்குக் கூட்டம் வந்தேமாதர கோஷத்துடன் முடிவுற்றது. பின் ௬௨ பிற்பகல் தேசீய சபைச் சார்பில் ராமநாதன் காரைக்குடிபோய் ஸ்ரீ அசலாம்பிகை அம்மாளை அழைத்துக் கொண்டு இரவு எ மணிக்குவர அதற்கு உ மணி நேரம் முன்னமே ஏராளமான ஜனங்கள் காத்திருக்க ஷை திருப்பாதிரிப் புலியூர் பண்டிதை அம்மாளவர்கள் எ௨ மணிமுதல் அ௩ மணிவரை நமது தற்கால நாகரீகத்தைக் கண்டித்தும் மஹாத்மாஜீயின் பெருமையைக் கொண்டாடியும் கதரின் அவஸ்யத்தைப் பற்றியும் அமிர்த மொழிகளாலும் காரைக்கோத்தான் ஸ்ரீமான் வயி. சு. ஷண்முகம் செட்டியாரவர்களும் சாரநாதன் அவர்களும் காரியதரிசி வெங்கிட்ட ராமய்யாவர்களும் முறையே காங்கிரஸின் விஷயங்களைப்பற்றியும் சிவன் கோவில் வாஸலில் சுமார் இரவு கOமணி வரை இதுவரையும் எதிர்பாராத நிசப்தமான ௫OO ஜனங்கள் மத்தியில் அருமை மொழிகளாலும் அவஸ்ய மொழிகளாலும் தீரமொழிகளாலும் அலங்கரித்த பின் மறுமுறையும் ஸ்ரீமதி பண்டிதை அம்மாளவர்கள் மஹாத்மாவின் ஆணையாகிய கதரின் அவஸ்யம் பற்றி கO நிமிடம் வரை தீரத்துடன் பேசிய பின் காரியதரிசி வெங்கிட்ட ராமன் அவர்கள் எல்லோருக்கும் வந்தனோபசாரம் சொல்ல இரவு கO௨ மணிக்கு கூட்டம் வந்தேமாதர கோஷத்துடன் இனிது நிறைவெய்தியது. இக்கூட்டத்தில் ஸ்திரீகள் உOOபேருக்கு மேல் வந்திருந்தது குறிப்பிடத்தக்கது. எனக்காரியதரிசிக்காக ராமநாதன் எழுதுகிறார்.



## சமூகத்தவர்களே கவனியுங்கள்!

அன்புமிக்க பெரியோர்களே!

சமூகத்தில் நடந்து வரும் அசட்டுத்தனமான பழக்க வழக்கத்தை விட்டொழியுங்கள்! அன்னிய சமூகத்தவர்களின் நிந்தனைக்கு ஆளாகாதீர்கள்!! என்பேரிற் கோபங் கொள்ளாதீர்கள்!!!

இதுபோழ்து உலகமிருக்கும்நிலையை நன்கு கவனியுங்கள்! யாருக்கு வந்த விருந்தோ வென நினைத்து இருந்து விடாதீர்கள்!!

இவ்வுலகமிருக்கும்நிலையைபுன்னி நம் வாலிபசகோதரர்கள் அயல் ஜாதிப் பெண்களைத் திருமணஞ் செய்யும் விஷயத்தில் மிக ஊக்கத்துடன் மனதிற் பூர்த்தியாகஎண்ணி விட்டனர்! யான் சொல்வது சத்தியம்! நீங்கள் நிலையில்லாப் பணத்துக்காக ஆசைப்பட்டு அடாத நினைவினால் இன்னுஞ்சொற்பகாலத்தில் பெண்களை வைத்துக் கொண்டு விழிக்கப்போகின்றீர்கள்! உங்களைப்பார்த்து உலகம் பழிக்கப் போகின்றது! அதுபோழ்து பெரியமனிதரென்றெண்ணுபவர்கள் முன்வருவரோ?

மலாயா, பர்மா நாடு, முதலிய இடங்களில் வசிக்கும் நம்மவர்கள் மனதை நீங்கள் அறியவே யில்லையென நினைக்கின்றேன்.

இனி வாலிபர்கள் தாய் தகப்பன் வார்த்தையை மீறி நடக்கப் போகின்றார்கள்! நீங்கள் ஏங்கப்போகின்றீர்கள்! நித்திரை செய்யாதீர்கள்! விலைக்குப் பெண்விற்பதை நிறுத்தி (அதாவது பாபமூட்டை கட்டுவதை நிறுத்தி) நற் கதிக்கு ஆளாகுங்கள்! இன்னமும் போலி மனிதர்களைக்கண்டு மயங்காதீர்கள்!

ஸ்ரீமான் வயி. நாக. ராம. அ. வேங்கடாசலச் செட்டியாரவாகள் நமது ஊழியன் பத்திரிகையில், கூகூ ஊர்க்கூட்ட விஷயமாக எவ்வளவோ எழுதி யுள்ளார்கள்; அதைக் கவனித்தவர்கள் ஒருவரு மிலர். போலிமனிதர்கள் கூகூ ஊர்க்கூட்டம் நன்கு நடைபெறுமானால் அன்னவர்கட்குச் செல்வாக்குக் குறைந்து விடுமே யென்ற எண்ணத்தாலும், நம்மை அடக்கி ஆளவேண்டுமென்ற எண்ணத்தாலுமன்றோ அக்கூட்டத்தையும் ஒருவாறாகச் செய்து விட்டனர். ஆனால்அவர்களின் எண்ணம் மலைஏறி விட்டது. நிகழ் காலம் புது உலகமென் றறிபார் போலும்!

பணத்தின் செருக்கினாலன்றோ மனைவியிருக்க மறுவிவாகஞ்செய்பவர்களும் தோல் சுரித்த கிழவர்களும் விவாகஞ்செய்ய நினைத்து

## இனிக் கூச்சமில்லை.

திருமணம் செய்து கொள்ள வேண்டிய வாலிப சகோதரர்களே! நீங்கள் யோசித்ததெல்லாம் ஊழியர்சங்கத்தார்கள் குறிப்பிட்ட வகையில் முதன் முதலாகத் திருமணம் செய்து கொண்டால் நமது சமூகத்தார்கள் நம்மைப் பற்றிப் பேசுவார்கள் என்பதே யல்லவா? நீங்கள் இரண்டாயிரவர் விவாகமற்றுத் தயங்குவது மனந்தாழாமலும், நம் மரபினோர்கள், ஓர் பெண்ணுக்கு முப்பதாயிரம் நாற்பதாயிரம் ரூபாய் வாங்கும் கொடிய செயலைப் பொறுக்க மாட்டாமலும், நீங்கள் நல்ல இல்லக்கிழத்தியோடு இன்புற்றிருக்க வேண்டுமெனவும் எண்ணி, கடந்த ஆவணித் திங்கள் இருபத்தேழாம் நாளில் கண்டரமாணிக்கம் திருவாளர் சூ. சி. இராமஸாமிச் செட்டியாரின் வழியாக உங்கள் கூச்சம் நீங்கும் பொருட்டு முதன் முதலாக அன்னார் திருமணம் செய்து கொள்ளும்படி சங்கத்தார்கள் செய்த பெருமுயற்சியின் பலனாக, திருவருள் கைகூடிற்று. ஆஹா! இராமசாமிச் செட்டியாரின் அறிவைப் பார்த்தீர்களா? நமது வாலிப சகோதரர்கள் இரண்டாயிரத்திற் கதிகமானவர்கள் விவாக மில்லாமல் ஏன் தயங்கவேண்டும்? சிக்கனமான முறையில் ஊழியர்சங்கத்தார்கள் பார்த்திருக்கும் வகுப்பில் மணப்பதற்கு கூச்சப்படுகிறீர்களென்று உங்கள் நன்மையைக் கருதி முதன் முதலாகத்தான் கல்யாணம் செய்து விட்டார்களல்லவா? இன்னும் உங்கட்கு ஏன் கூச்சம்? உங்கள் வருத்தம் தீர—நீங்கள் சந்தோஷப்பட—நீங்கள் இன்பம் அனுபவிக்க—உங்கள் கையிலுள்ள பணத்தோடு இன்னும் கடன்வாங்கி, எல்லாவற்றையும் ஓர் பெண்ணுக்குக் கொடுத்து ஏமாறாதிருக்க—உங்கள் கூச்சம் தெளிய வழிகாட்டிய இராமசாமிச் செட்டியாரின் புகழ் மாறாதிருக்க—ஊழியர்சங்கத்தார்கள் செய்துவந்த பெரிய முயற்சியைஈடேற்ற, நீங்கள் செய்யவேண்டிய கைம்மாறென்னவென்பதை ஆழ்ந்து சிந்தித்து அறிந்தீர்களா? அறிந்திருப்பின் இன்னும் ஏன் தாமதம்? சீக்கிரம் செய்ய வேண்டு மல்லவா? சகோதரர்களே! பிற வகுப்புப் பெண்களைக் காட்டிலும் நம் ஸமூகப் பெண்களிடத்தில் மந்திர சக்தி முதலிய மகிமை ஏதேனும் இருக்கின்றதோ? எதற்கோ நாற்பதாயிரம்! குணம், கல்வி, அறிவு, ஒழுக்கம் முதலியவைகட்கோ? இல்லை; இல்லை. குலம் கருதியே என்றால், நாம் ஆதியிற் பெண்ணெடுத்தது அக்குலம் தானே. அதை ஏன் மறந்து விடவேண்டும். அல்லாமலும், நம் சமூகப் பெண்களில் பலர், புருஷனுக்கு அடங்காமலும், அவரைச் சட்டைசெய்யாமலும் அவர் சொல்லுக்கு மாறாகச் செய்வதும், ஊர்வம்பு பேசுவதும், கணவனுக்குச் செய்யவேண்டிய பணிவிடைகளில் ஒன்றேனும் செய்ய அறியாமலும், கடுகடுத்த முகத்தோடும் மற்றும் பல துற்குணங்களோடும் இருப்பதற்கோ! நாற்பதாயிரம் எதற்காக வென்பதைத் தெரிந்தவர்கள் சொல்லட்டும்! கணவன் தன்பேரில் சந்தோஷப்படும்படி நடந்து கொள்பவளாயும், அவர்களை நாம் ஏதேனும்கேட்டால் முகமலர்ச்சியோடு விடையளிப்பவளாயும், நல்ல அழகுவாய்ந்தவளாயும், நாணம் மடம், அச்சம், பயிர்ப்பு என்று சொல்லுகிற விதியில் சிறிதும் தவறாதவளாயும், தாய் தகப்பன்மார்களுக்குப்

ஏனையோருக்குப் பெண் அகப்படாது பலரைத் துன்பத்துக்குள்ளாக்கினர்.

சிலர் தங்கள் உணவுக்குப் பொருள் தேட நல்வழி தெரியாது, அரும்பொருந்தவத்தால் ஈன்ற பெண் என நினையாது, தாங்கள் எவ்விதம் இன்புற வாழுகின்றோமெனவும் உணராது, தாய் தகப்பன் வார்த்தையைக் கடவாத பேதமை வாய்ந்த பெண்மணிகளை, பணத்துக்காக- நகைக்காக- டம்பத்துக்காக-மாப்பிள்ளை எவ்வித மிருப்பினும் அன்னவர்களிடம் விற்றுப் பணம் வாங்கிக் கொண்டு விவாகஞ் செய்து கொடுக்கின்றார்கள். என்ன அநீதி! என்ன அநீதி!! அதனால் பின்னா மனதிலும் நினைக்கவொண்ணா எவ்வளவோ கேடு நிகழப்போகின்றது. அதைப்பெற்றோர்கள் நன்கு உணர்வரேல் ஒரு போழ்தும் இவ்வித விவாக விஷயங்கட்கு ஒப்பவே மாட்டார்கள்; யான் இன்னும் சில உரைகளைச் சொல்ல என் மனம் வருந்துகின்றது. பெற்றோர்களே! தங்களைப்போலவே நல்வாழ்வு வாழ விவாகஞ் செய்து கொடுங்கள்.

பணத்தின் செருக்கினால் சமூகத்துக்குக் கேடுவிளைவதை உணராது செய்துவந்ததாலன்றோ பெண்ணிற்கு விலை ஏறி, நமது கிளர்ச்சியுமுண்டாகி, நம் முன்னோர்கள் செய்த முறையைக் கவனித்து அதன்படி நடக்க ஊழியச்செல்வர்கள் முன்வந்தனர்.

நீங்களெல்லோரும் நற்காரியங்களில் நம் ஊழியர்சங்கத்தாருடன் முன்னின்று சமூகம் சீர்திருத்தமடையச் செய்வீர்களென நாம் வழிபடு கடவுளாகிய குகப்பெருமானைச் சிந்திக்கின்றேன்.

சுந்தரப்பெயருடையோன்.

ஈப்போ.

## மலாய் ஸ்டேட் ரப்பர் விலை ஏறமாட்டாதா?

நண்பர்காள்! இவ்விஷயமாய் யான் மூன்று முறை முக்கியமான சில விஷயங்களைப் பற்றி எழுதி யுள்ளேனாகிலும் மறுபடியும் எழுதவேண்டிய திருக்கின்றது. தற்சமயம் ரப்பர் விலை கூடிவரும் நிலையைச் சிறிது காட்டினதே தவிர உண்மையாகக் கூடவில்லை. ரப்பர்விலை குறைந்து வந்ததற்கு காரணம்தெரியவில்லை என நீண்ட நாள் யோசித்திருந்தோம். சமீபத்திலே அதைப்பற்றி ஒருவாறு தெரிந்துக் கொள்ள நேர்ந்தது. நமது பிரிட்டிஷ்இராஜாங்கம் நடைபெறக்கூடிய தலைமைஸ்தானமாகிய இங்கிலாந்துக்கே ஜாஸ்தியாக இங்கிலீஷ் இராஜாங்கத்துக்கு உட்பட்ட இடங்களிலிருந்து ரப்பர் வாங்கி அனுப்பப்படுகின்றன. அமெரிக்கா, ஜப்பான், இட்டாலி முதலிய அன்னிய தேசங்கட்கு ஒருமாதத்திற்கு இவ்வளவு பாரந்தான் ஏற்ற வேணுமென ஒப்பந்தம் ஏற்பட்டிருக்கிறது. மலாய் ஸ்டேட்டில் ரப்பர் வாங்குவதற்கும் கொடுப்பதற்கும் ஒருவித தீர்வையுமில்லை யாகினும் ரப்பரை யேற்றிச் செல்லும் புகைக் கப்பல்கட்கு ஜாஸ்தியான தீர்வை வைத்திருப்பதோடு இங்கிலாந்து சென்றதும் உள் நாட்டுத் தீர்வையும் அதோடு ஏற்படுகின்றது அத்தீர்வை முதலிய செலவுகளைச் சேர்த்து என்ன விலை அங்கு விற்குமோ அந்த விலையைக் காட்டிலும் குறைவாக மூன்றில் ஒன்று தான் மலாய் ஸ்டேட்டில் ரப்பரின் அசல் விலையாகும். இது ராஜாங்கத்தாரும் அவ்வியாபாரம் முழுதும் செய்யும் ஐரோப்பியரும் செய்து வரும் தந்திரச் செயல். இந்த லாபம் தோட்டம் வைத்திருப்பவர்கட்கும் அன்றூடகம் கஷ்டப் பட்டுப் பிழைக்கும் கூலியாள்களுக்குமில்லாது இங்கிலாந்து வியாபாரிகளும் தரகர்களும் சுங்க இலாகாதாரும் தட்டிக் கொண்டுபோக, ராஜாங்கத்தாருதவியாகவு மிருக்கின்றனர். இங்கிலீஷ்காரரைத்தவிர மற்றவர் ரப்பருக்கு வேண்டுமாகில் அதிக விலைகொடுத்து இவர்களிடமே பெற வேண்டியிருக்கிறது. இப்படியான காரணங்களால்தான், ரப்பர் விலை வர வர எவ்வளவோ குறையினும் அதைக் கொண்டு செய்யப்படும் சாமான்விலை அதிகப் படுகிறது. நாம் ரப்பரைக் கையிருப்பு வைத்துக் கொள்ளாது உடனே விற்றுவிடவெண்ணுவதால்தான் ஐரோப்பிய வியாபாரிகள் எண்ணப்படி நடக்க ஏதுவாகிறது. ரப்பர்ப் பாலெடுக்கும் கூலிகளுக்கே (சம்பளத்துக்கு) இழுத்துக் கொண்டிருந்தால் நாம் எப்படி ரப்பரை வைத்துக் கொண்டிருக்கமுடியும். மற்ற தேசபாஷைப் பத்திரிகைகளிலும் நம்தாய்பாஷைப் பத்திரிகைகளிலும் அடிக்கடி இவ்விஷயமாய் எழுதுவதால் பயன் ஏற்படாது போக மாட்டாது. நம்மவர்களுக்குள்ள தோட்டங்களை விட எத்தனையோ மடங்கு அன்னிய தேசத்தார்க்கும் சீனர் மலாய்க்காரர்களுக்கு மிருக்கின்றன. நமக்கு ஏற்படும் நஷ்டம் அவர்களுக்கு சொற்ப முண்டு. எவ்விதமான தந்திரத்தாலாவது அயல்நாட்டார்ரப்பர்த்தோட்டங்களைக்கைப்பற்றப்பார்க்கின்றனர். இன்னும் எவ்வளவு புதிதுபுதிதாக ரப்பர்ச்சாமான்கள் கண்டுபிடித்துச் செய்தாலும் ரப்பர் பால் விலை கூடுவதாய்க் காணேம். வெள்ளிவிலையும் ரப்பர் விலையும் ஒரே நிதானமாக யிருக்கும் பொழுது நம்மவர் ஒரு இனத்தில் க0000 வெள்ளி கொடுப்பதானல் ஆசாமி யிடமுள்ள சொத்து அதைவிட இரண்டு மூன்று பங்கு இருக்கும். இப்படி அநேகருக்கு லக்ஷக்கணக்கான தொகைபாக்கியிருக்கிறது. அக்காலத்து ரப்பர்த் தோட்ட விலையும் குறைந்த ரேட்டாகவே யிருந்தது. தற்சமயம் ரப்பர் விலை குறைய முற்பட்டதிலிருந்தும் ஆசாமிகட்குள்ள சொத்துக்களுக்கு மேல் மதிப்பாவதோடு கொடுக்கப் பட்டுமிருக்கிறது.

(தொடரும்.)

---

பயந்து நடப்பவளாயும், தன் புருஷன் பேரில் பட்சமுள்ள வளாயும்,உள்ள நல்ல உத்தமிகளைநீங்கள் மணக்கவிருக்கும் இச் சந்தர்ப்பம் நீங்கள் முன் ஜென்மத்திற் செய்தபூசாபல மென்றே சொல்ல வேண்டும். ஆனல், நீங்கள் இவ்வழியில் இறங்குவதற்காக இவர்களைப்பற்றிப் புகழ்வதாக நினைக்கக் கூடாது. உண்மையிலேயே அவர்கள் குணம் அப்படிப் பட்டது தான் என்பதைக் கல்யாணம் செய்துகொண்ட பிறகு நீங்களே யறிவீர்கள்! நல்ல சற்குணவதிகளாக, அந்நிய வகுப்பில் அதிகப் பணச் செலவில்லாமல் திருமாங்கல்யம் சூட்டி, ஒரு விதத்திலும் கவலை இல்லாமல் கையிலுள்ள சுருக்கமான பொருளை மேன் மேலும் விர்த்தி செய்து கொண்டு, புத்திர மித்திர களத்திரத்தோடு நீடூழிகாலம் வாழுங்கள்! அன்பார்ந்த சோதரர்களே! கூச்சத்தை விட்டு விடுங்கள்! திடசித்தம் கொள்ளுங்கள்!வரவிருக்கும் ஐப்பசியில் வரிசை வரிசையாக மணந்து கொள்ளுங்கள்! காலம் தாழ்த்தாதீர்கள்! திருவருள் நலம்புரியும்.

ஒரு நிருபர்.

---

## தமிழ்நாட்டு மகாநாடு.

திருப்பூரில் கூடப்போகும் தமிழ் நாட்டின் மகாநாட்டில் அக்கிராசனம் வகிக்க ஸ்ரீமான் சக்கரவர்த்தி இராஜகோபாலாச்சாரியார், டாக்டர் வரதராஜது, ஸ்ரீமான் வ. வெ. சு. ஐயர், இம்மூவரும் முறையே மறுத்துவிட்டது நேயர்கட்குத் தெரியும். இப்பொழுது டாக்டர் வரதராஜலு "தமிழ்நாடு" பத்திரிகையில் என் பெயரைக் குறிப்பிட்டிருக்கிறார். திருப்பூரிலுள்ள சில நண்பர்களும் என் மீது நோக்கஞ் செலுத்தி யிருக்கிறார்கள். ஒருவர் பின் ஒருவராக மூவர் மறுத்ததைக் கொண்டு என் சம்மதம் பெற்று என்னைத் தெரிந்தெடுக்கவேண்டுமென்று ஜில்லாக்களிலுள்ள சில அன்பர்கள் எனக்குக் கடிதங்களும் தந்திகளும் விடுத்துக் கொண்டே யிருக்கிறார்கள். கீழ் நாட்டு வழக்க ஒழுக்கங்களைப் பெரிதுங் கடைப்பிடித்து நடக்கும் எனது உள்ளக் கிடக்கையை இன்னும் என்னோடு நெருங்கிப் பழகியுள்ள நண்பர்கள் உணராமலிருப்பதைக் குறித்துப் பெரிதும் வருந்துகிறேன். வெள்ளம்வருமுன் அணைகோலுவது நலம். ஜில்லா தேசியசபைக் கூட்டங்கள் என் பெயரைக் குறிப்பிடாதிருக்குமென்று நம்புகிறேன்.ஒருவேளை ஜில்லாக் கூட்டங்களிற் பெரும்பாலன என்னைத் தெரிந்தெடுத்தாலும் நான் இசைய இயலாமையை இப்பத்திரிகை வாயிலாக விண்ணப்பித்துக் கொள்கிறேன்.

திரு. வி. கலியணசுந்தரன்.

---

## விளம்பரம்.

உண்மை உத்ஸாகம் உறுதிகளை உள்ளது உள்ளபடி ஆசிரியனைப்போல் எடுத்துப் போதிப்பது எது? பத்மநாதன்- சுவீகார புத்திரன்- அர்ச்சுன சந்நியாஸி- லக்ஷ்மி விஜயம் எனும் நான்கு அரிய பெரிய சமூக சீர்திருத்த நூல்களே.

| | |
|---|---|
| பத்மநாதன் | ரூ. ௧—௪—௦ |
| சுவீகாரபுத்திரன். | ரூ ௦—௧௨—௦ |
| அர்ச்சுன சந்நியாஸி | ரூ ௦—௧௨—௦ |
| லக்ஷ்மிவிஜயம் | ரூ. ௦—௧௦—௦ |

கிடைக்குமிடம்— **சு. பழனியப்பா.**
ராமச்சந்திரபுரம்,
(திருச்சி)

## சந்தா விபரம்.

| | |
|---|---|
| இந்தியா முதலிய உள்நாடுகளுக்கு வருஷ ஒன்றுக்கு ... | ௫—௦—௦ |
| சிங்கப்பூர் முதலிய வெளி நாடுகளுக்குவருஷஒன்றுக்கு | ௬—௦—௦ |
| தனிப்பிரதி ஒன்றுக்கு ... | ௦—௨—௦ |

## விளம்பர விவரம்.

| | |
|---|---|
| மாதம் ௧-க்குபத்தி-௧-க்கு... | ௨௦—௦—௦ |
| ஷை அரைப்பத்திக்கு... | ௧௧—௦—௦ |

**மானேஜர்,**
**தனவைசிய ஊழியன் ஆபீஸ்,**
காரைக்குடி.

## பெங்களூர்.







ராய. சொக்கலிங்கத்தால் கரைக்குடி தனவைசிய ஊழியன் அச்சியந்திரசாலையில் அச்சியற்றிப்பிரசுரஞ் செய்யப்பெற்றது

